குருகுலம் வெளியீடு:

# आदित्यहृदयस्तोत्रम्

# ஆதி³த்ய ஹ்ருத³ய ஸ்தோத்ரம்

சாஸ்த்ர ரத்னகர ப்ரம்மஸ்ரீ

**தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரிகள்**



**ஸ்ரீ சங்கர குருகுலம்**

அபிராமபுரம், சென்னை - 600 018



காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஸ்ரீ ஜகத்குரு
ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

## முகவுரை

நமது தேசத்தில் ரஹஸ்யமான தத்துவங்களை அறிந்த மஹரிஷிகள் பலர் இருந்து வருகின்றனர். அவர்களுள் அகஸ்த்ய மஹர்ஷி எல்லா விதத்திலும் ஒரு பெரிய மஹான் என்பதை நிச்சயமாமச் சொல்லலாம். அந்த மஹான் பராசக்தியான ராஜராஜேச்வரியை உபாஸித்து, தேவியினுடைய ஸந்தர்சனத்தினாலும் அநுக்ரஹத்தினாலும் வேதவேதாந்த ரஹஸ்யங்கள் யாவற்றையும் ப்ரத்யக்ஷமாக அறிந்து கொள்ளும் சக்தியுள்ளவரானார். ஸகல வித்யைகளிலும் இந்த மஹான் முதன்மை யானவர். இவருக்கு 'வித்யாமண்டல ரிஷி' என்று ரிஷிகணங்கள் ஒரு பெயரைக் கொடுத்திருக்கிறார்கள். க்ருத யுகம் முதலாக இந்த மஹான் சிரஞ்ஜீவியாக இருந்து கொண்டு லோகத்தை அலங்கரித்து வருகிறார். "பின் வரும் யுகங்களில் பிராணிகளுக்கு, மேதை, ஆயுஸ் முதலியவை நாளுக்கு நாள் அல்பமாக ஏற்பட்டு விடுமே; மனுஷ்யத்தன்மையில் பூர்வகர்மாக்களின் பயனாக அடிக்கடி பிராணிகளுக்கு ஏதாவது துக்கங்கள் வந்துகொண்டே இருக்குமே; ஸத் கர்மாக்களில் ச்ரத்தை அரிதாகி விடுமே; இவ்விதமான நிலையிலும் பிராணிகள் ஸுகமாக வாழ்ந்துவர, நாம் ஓர் உபாயத்தைத் தேர்ந்தெடுத்து லோகத்தில் ஸ்தாபனம் செய்ய வேண்டும்" என்ற கவலையுடன் அகஸ்த்ய மஹர்ஷி வேத, சாஸ்த்ர, புராணங்களை எல்லாம் ஆராய்ந்து பார்த்தார். அநேக காலங்களாக இந்த மஹான் ச்ரமப்பட்டு, அந்த உபாயத்தைத் தாம் கண்டுபிடிக்க முடியாமல் தமக்கு உபாஸ்யமான, லோகமாதாவான பராம்பிகையை ஸ்தோத்ரம் செய்து, தம் கவலையைத் தெரியப்படுத்திக்கொண்டார்.

ஜகன்மாதாமான பராசக்தி உடனே பிரத்தியக்ஷமாக ஆவிர்ப்பவித்து, அவர் எதிர்பார்த்த உபாயத்தை அவருக்கு உபதேசம் செய்தார். அதுதான் இந்தப் ப்ரக்ருதமான **ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரம்** என்று சொல்லப்பெறுகிறது.

அந்த உபாயத்தை, மஹானான அகஸ்த்யர் அம்பிகை மூலமாக அடைந்தாலும், அதை மஹாபுருஷன் மூலமாக லோகத்தில் ப்ரசுரம் செய்யும்பொருட்டு, அதற்குத் தகுந்த உத்தமமான பாத்ரத்தைத் தேடிப் பார்த்துவந்தார். த்ரேதா யுகத்தில், லக்ஷ்மீபதியான மஹாவிஷ்ணு ஸ்ரீராமனாக அவதாரம் செய்து, ஸீதா நிமித்தமாக, லங்கைக்கு அதிபதியான ராவணனோடு போர் செய்யும் ஸந்தர்ப்பத்தில், அந்த ராமருக்கோ, "நாம் விஷ்ணு என்பதைப் பிரகடனம் செய்துவிட்டால், ராவணன் சரணாகதி அடைந்துவிடுவன். அப்பொழுது அவனைக் கொல்லவே கூடாது; ரக்ஷித்துதான் ஆக வேண்டும். அப்படியானால் நமது அவதாரம் பயனற்றதாகிவிடும்.

**स हि देवैरुदीर्णस्य रावणस्य वधार्थिभिः ।**
**अर्थितो मानुषे लोके जज्ञे विष्णुः सनातनः ॥**

**ஸ ஹி தே³வைருதீ³ர்ணஸ்ய ராவணஸ்ய வதா⁴ர்தி²பி⁴: ।**
**அர்தி²தோ மானுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணு: ஸனாதன: ॥**

என்ற வாக்யத்தை அநுஸரித்து, நாம் ராவண வதத்துக்காக அவதாரம் செய்தது வீணுகிவிடும் அல்லவா? மனிதஞுகவே பாவித்துக்கொண்டால், நிகரற்ற பராக்கிரமத் தோடு கூடின ராவணஊெ எவ்விதம் கொல்ல முடியும்? எல்லா மனிதர்களுக்குமே இவ்விதமான ஆபத்துக்கள் அடிக்கடி வருவது ஸஹஜந் தானே! அந்த ஸந்தர்ப்பத் தில் அவர்களுக்கு அதை நிவ்ருத்தி செய்து கொள்வதற்கு அதிக ச்ரமமில்லாத ஓர் உபாயத்தைக் காட்டிக்கொடுப்பதற்கு, நாம் அதை மனுஷ்யஞுக இருக்கும் தன்மை யிலேயே ஓர் உபாயத்தை ஸம்பாதித்து, அநுஷ்டித்து அதன்மூலம் அதை அவர்களு க்கு ஸ்தாபித்துக் கொடுக்க வேண்டும் அல்லவா?" என்ற கவஊலயை அடைந்தார். தேவதைகளுடன் அந்த ஆச்சர்யகரமான ராம ராவண யுத்தத்தைப் பார்க்கவந்த ஸர்வஜ்ஞரான அகஸ்த்ய மஹர்ஷி, இதுதான் தமக்குச் சரியான ஸந்தர்ப்பம் என்று அறிந்துகொண்டு, தமக்கு அம்பாளுடைய அநுக்ரஹத்தால் கிடைத்திருக்கும் பரம ரஹஸ்யத்தை ஸ்ரீராமனுக்கு இந்த ஸமயத்தில்தான் உபதேசம் செய்ய வேண்டும் என்று நிஊனத்தார். ஸ்ரீராமனுக்கோ, இவ்விதமான உபாயத்தை அறிந்துகொண்டுதான், ராவணஊனக் கொல்ல வேண்டும் என்பது என்பது இல்ஊல. எந்த பராசக்தி மூலமாக இந்த ரஹஸ்யம் அகஸ்த்ய மஹர்ஷிக்குக் கிடைத்ததோ, அந்தப் பராசக்தியே,

**यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति पर्वत ।**
**अभ्युत्थानमधर्मस्य तदा वेषान् बिभर्म्यहम् ॥**

**யதா³ யதா³ ஹி த⁴ர்மஸ்ய க்³லாநிர்ப⁴வதி பர்வத ।**
**அப்⁴யுத்தா²னமத⁴ர்மஸ்ய ததா³ வேஷான் பி³ப⁴ர்ம்யஹம் ॥**

என்ற தேவீபாகவத வசனத்திஞல், ஸ்ரீராமஞுக அவதரிக்கும் போது, அந்த உபாயத்தி ஞல் ஸ்ரீராமனுக்கு ஆகவேண்டியது ஒன்றுமே இல்ஊல. ஆகிலும்,

**'गुणाधिकैः अनुष्ठीयमानः धर्मः दीर्घेण कालेन प्रचयं गमिष्यति ।**

**'கு³ணாதி⁴கை: அனுஷ்டீயமான: த⁴ர்ம: தீ³ர்கே⁴ண காலேன ப்ரசயம் க³மிஷ்யதி ।**

என்ற ரீதியை அநுஸரித்து, கீதாசார்யஞன க்ருஷ்ண பரமாத்மா தன்னுடைய கீதா சாஸ்த்ரத்தைப் பிரசுரப்படுத்துவதற்குப் புருஷ ச்ரேஷ்டஞன அர்ஜுனஊன நிமித்தமாக வைத்துக் கொண்டதுபோல், ஆதித்யஹ்ருதய ஸ்தோத்ரம் என்ற வேதசாஸ்த்ர ரஹஸ்யத்தை லோகத்தில் பஹிரங்கப்படுத்துவதற்கு உத்தம புருஷஞன ஸ்ரீராம ஊனயே நாம் நிமித்தமாக வைத்துக்கொள்வோம் என்று நிஊனத்து, அகஸ்த்ய மஹர்ஷி ஸ்ரீராமனுக்கு எதிரில் வந்து நின்றுகொண்டு, இந்த ரஹ்ஸ்யமான ஸ்தோத்ரத்தை அவருக்கு உபதேசம் செய்தார்.

இதிலுள்ள ஒவ்வொரு பதத்துக்கும் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று க்ரமங்கஊளயும் அநுஸரித்து, ஸூர்ய பகவான், ஸகுண ப்ரஹ்மம், நிர்குண ப்ரஹ்மம் என்ற மூன்று விதமான ப்ரதிபாத்யமான வஸ்துவையும் காட்டி, மூன்று விதமான அர்த்தங்களுடன் தேவநாகரம், தமிழ் இரண்டு லிபிகளிலும் லோகோபகார த்துக்காகவே எழுதிப் பிரசுரம் செய்யப் பெறுகிறது.

# ஆதி³த்ய ஹ்ருத³ய ஸ்தோத்ரம்

மனுஷ்ய நிலையில் இந்த ஸ்தோத்ரத்தைக் கைப் பிடித்துக்கொண்டவன் தனக்கு ஏற்பட்ட எவ்விதமான ஆபத்தையும் நிவ்ருத்தி செய்துகொள்ளலாம். இந்த ஸ்தோத்ர பாராயணத்தினால் ஸ்ரீராமசந்த்ர மூர்த்தியினுடைய அநுக்ரஹமும், மஹர்ஷி ச்ரேஷ்டாரன அகஸ்த்ய மஹர்ஷியினுடைய அநுக்ரஹமும், அந்தர் யாமியான பரப்ரஹ்மத்தின் க்ருபையும் அவச்யமாக ஸித்திக்கும்.

ஆஸ்திக மஹாஜனங்கள் ஒவ்வொருவரும் இதிலுள்ள ரஹஸ்யங்களை நன்கு அறிந்துகொண்டு, ஸகல விதமான ச்ரேயஸ்ஸையும் அடைய வேண்டுமெ ன்று ப்ரார்த்திக்கிறேன்.

**தேதியூர் ஸுப்ரமண்ய சாஸ்த்ரிகள்**

---

श्रीः

ஶ்ரீ:

# आदित्यहृदयम्

# ஆதி³த்யஹ்ருத³யம்

**ततो युद्धपरिश्रान्तं समरे चिन्तया स्थितम् ।**
**रावणं चाग्रतो दृष्ट्वा युद्धाय समुपस्थितम् ॥**
**दैवतैश्च समागम्य द्रष्टुमभ्यागतो रणम् ।**
**उपागम्याब्रवीद् राममगस्त्यो भगवान् ऋषिः ॥ १ ॥**

**ததோ யுத்³த⁴பரிஶ்ராந்தம் ஸமரே சிந்தயா ஸ்தி²தம் ।**
**ராவணம் சாக்³ரதோ த்³ருஷ்ட்வா யுத்³தா⁴ய ஸமுபஸ்தி²தம் ॥ 1 ॥**
**தை³வதைஶ்ச ஸமாக³ம்ய த்³ரஷ்டுமப்⁴யாக³தோ ரணம் ।**
**உபாக³ம்யாப்³ரவீத்³ ராமமக³ஸ்த்யோ ப⁴க³வான் ருஷி: ॥ 2 ॥**

| | | |
|---|---|---|
| **ततः** ததः | - | ராவணனுடைய ரதம் ஸாரதி மூலமாக யுத்தக்களத்திலிருந்து கொஞ்ச தூரத்தில் அப் புறப்படுத்தப்பட்டபோது, |
| **दैवतैः** தை³வதை: | - | தேவதைகளோடு, |
| **समागम्य** ஸமாக³ம்ய | - | சேர்ந்து கொண்டு, |
| **रणम्** ரணம் | - | யுத்தத்தை, |
| **द्रष्टुं** த்³ருஷ்டும் | - | பார்ப்பதற்கு, |
| **अभ्यागतः** அப்⁴யாக³த: | - | வந்தவரான, |
| **भगवान्** ப⁴க³வான் | - | ஸர்வஜ்ஞராயும், |
| **ऋषिः** ருஷி: | - | வித்யாமண்டலத்துக்கு ஆசார்யராயுமுள்ள, |
| **अगस्त्यः** அக³ஸ்த்ய: | - | அகஸ்த்ய மஹர்ஷி, |

| | | |
|---|---|---|
| **युद्धपरिश्रान्तं** **யுத்³த⁴பரிஶ்ராந்தம்** | - | ப்ரபலனான ராவணனோடு கடுமையான போர் செய்த காரணத்தினால் தாமும் ச்ரமத்தை யடைந்தவர்போல் நடிப்பவரும், |
| **समरे** **ஸமரே** | - | யுத்தத்தில், |
| **युद्धाय** **யுத்³தா⁴ய** | - | போர் செய்வதற்கு, |
| **समुपस्थितम्** **ஸமுபஸ்தி²தம்** | - | உத்ஸாஹ முள்ளவனான, |
| **रावणं** **ராவணம்** | - | ராவணனைக் குறித்து, |
| **चिन्तया स्थितं** **சிந்தயா ஸ்தி²தம்** | - | விஷ்ணுத்வத்தைப் பிரகடனம் செய்யாமல் எப்படி ராவணனைக் கொல்லுவது என்ற கவலையோடு கூடியவராயும் இருக்கிற, |
| **रामं** **ராமம்** | - | ராமரை, |
| **दृषट्वा** **த்³ருஷ்ட்வா** | - | பார்த்து, |
| **अग्रतश्च** **அக்³ரதஶ்ச** | - | எதிரிலும், |
| **उपागम्य** **உபாக³ம்ய** | - | வந்தடைந்து, |
| **अब्रवीत्** **அப்³ரவீத்** | - | சொன்னார். |

**தாத்பர்யம்: -** ஸ்ரீராமனும் ராவணனும் யுத்தம் செய்துகொண்டிருந்தபொழுது ராமபாணங்களின் வேகத்தினால் ராவணனும் கொஞ்சம் மூர்ச்சையடைந்தான். அதை அறிந்த அவனுடைய ஸாரதி, ராவணனுடைய ரதத்தைக் கொஞ்ச தூரத்தில் செலுத்தித் தன் யஜமானனான ராவணனை ரக்ஷித்தான். அந்த ஸந்தர்ப்பத்தில் ராமரும் கொஞ்சம் பரிச்ரமத்தை யடைந்து, 'நமது ஸ்வரூபத்தை மறைத்து வைத்து இந்த ராவணனைக் கொல்லுவது ச்ரமப்படும்போல் தோன்றுகிறதே' என்று கவலையை அடைந்தார். அத்துடன், "மனுஷ்ய பாவத்தில் எவ்விதமான ஆபத்திலும் அநாயாஸமாகவே அதை விலக்கிக்கொள்ள ஓர் அபூர்வமான உபாயத்தை நாம் அநுஷ்டித்து அதை லோகத்தில் ஸ்தாபிக்க வேண்டும். அதற்கு ஓர் ஆசார்ய புருஷன் மூலமாக நாமே அந்த உபாயத்தை உபதேசம் செய்துகொண்டு அதன் பெருமையினால்தான் பிரபலனான ராவணனை நாமும் கொன்றோம் என்றதைப் பிரசுரப்படுத்த வேண்டும்" என்று எண்ணம் கொண்டார்.

இவ்விதமான ஸ்ரீராமருடைய அபிப்பிராயத்தை, யுத்தத்தை வேடிக்கை பார்க்க வந்த தேவதைகளுடைய மத்தியில் இருந்த அகஸ்த்ய மஹர்ஷி அறிந்து கொண்டு, தாம் வித்யாமண்டல ரிஷியானதால் அந்த உபாயத்தைத் தாமே ஸ்ரீராமனுக்கு உபதேசம் செய்கிற வ்யாஜத்தை நிமித்தமாக வைத்துக்கொண்டு, ஆகாசத்திலிருந்து பூமண்டலத்துக்கு இறங்கி வந்து ராமனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

**राम राम महाबाहो शृणु गुह्यं सनातनम् ।**
**येन सर्वानरीन् वत्स समरे विजयिष्यसि ॥**
**आदित्यहृदयं पुण्यं सर्वशत्रु विनाशनम् ।**
**जयावहं जपेंन्नित्यमक्षय्यं परमं शिवम् ॥ २ ॥**

**ராம ராம மஹாபா³ஹோ ஶ்ருணு கு³ஹ்யம் ஸனாதனம் ।**
**யேன ஸர்வானரீன் வத்ஸ ஸமரே விஜயிஷ்யஸி ॥ 3 ॥**
**ஆதி³த்யஹ்ருத³யம் புண்யம் ஸர்வஶத்ரு விநாஶனம் ।**
**ஜயாவஹம் ஜபேம்நித்யமக்ஷய்யம் பரமம் ஶிவம் ॥ 4 ॥**

| | | |
|---|---|---|
| **राम राम**<br>**ராம, ராம** | - | ஹே ராமனே! ஹே ராமனே! (ராமர் கவலையுள்ளவராக இருக்கும் காரணத்தினாலோ, அல்லது அகஸ்த்ய மஹர்ஷி பரம ஆதரவுடன் ஸம்போதனம் செய்யும் காரணத்தினாலோ, அல்லது கார்யத்திலுள்ள வேகத்தினாலோ இரண்டு தடவை கூப்பிடுகிறார்.) |
| **महाबाहो**<br>**மஹாபா³ஹோ** | - | ஹே ராகவ! உன்னுடைய பாஹு பலத்தை யாராலும் வர்ணிக்க முடியாது. மூலபலத்தோடு யுத்தம் செய்த போது காந்தர்வாஸ்த்ரத்தை நீ பிரயோகம் செய்ததிலிருந்து உன்னுடைய பாஹு பலம் நிகரற்றதென்று வெளியாகிவிட்டது (என்று ராமனை சிலாகித்து அபிமுகமாகச் செய்து கொண்டார்.) |
| **वत्स**<br>**வத்ஸ** | - | ஹே தசரத சக்ரவர்த்தியின் அருமைக் குமாரனே! |
| **येन**<br>**யேன** | - | எந்த உபாயத்தால், |
| **समरे**<br>**ஸமரே** | - | யுத்தத்தில், |
| **सर्वान् अरीन्**<br>**ஸர்வான் அரீன்** | - | ஸமஸ்த சத்ருக்களையும், |
| **विजयिष्यसि**<br>**விஜயிஷ்யஸி** | - | ஜயிப்பாயோ, |

| | | |
|---|---|---|
| **तत्**<br>**தத்** | - | அந்த, |
| **सनातनं**<br>**ஸனாதனம்** | - | வேதத்தைப் போல் நித்யமாயும், |
| **गुह्यं**<br>**கு³ஹ்யம்** | - | மிகவும் கோப்யமாயுமுள்ள உபாயத்தை, |
| **शृणु**<br>**ஶ்ருணு** | - | கேள், |
| **पुण्यं**<br>**புண்யம்** | - | படிக்கிறவர்களுக்குப் புண்யத்தை விருத்தி செய்கிறதாயும், |
| **सर्वशत्रु विनाशनम्**<br>**ஸர்வஶத்ரு விநாஶனம்** | - | ஸமஸ்தமான சத்ருக்களையும் நசிக்கச் செய்கிறதாயும், |
| **जयावहं**<br>**ஜயாவஹம்** | - | தன் கக்ஷிக்கு ஒருவிதமான குறைவில்லாமல் ஜயத்தைக் கொடுக்கக் கூடியதாயும், |
| **अक्षय्यं**<br>**அக்ஷய்யம்** | - | மோக்ஷம் என்ற மஹா பலனைக் கொடுக்கக் கூடியதாயும், |
| **परमं शिवं**<br>**பரமம் ஶிவம்** | - | மஹா பாபத்தைச் செய்தவனைக் கூட பரிசுத்தம் செய்யும் விஷயத்தில் முதன்மையான பாவனமாயும் உள்ள, |
| **आदित्यहृदयं**<br>**ஆதி³த்யஹ்ருத³யம்** | - | ஸூர்யனுடைய மனத்துக்கு ஸந்தோஷத்தை உண்டு பண்ணுகிற காரணத்தாலோ, அல்லது ஸூர்ய மண்டலத்தினுடைய நடு மத்தியிலுள்ள ஸகுணப்ரஹ்மத்தையே விஷயமாக அவலம்பிக்கும் காரணத்தாலோ, அல்லது ஸூர்யனைப் போல் மஹா பரிசுத்தமான ஹ்ருதய புண்டரீகத்தினுடைய நடுமத்தியில் பாஸிக்கும் நிர்க்குண ப்ரஹ்மத்தை விஷயமாக அவலம்பிக்கும் காரணத்தாலோ, ஆதித்யஹ்ருதயம் என்ற பெயருடன் கூடிய ஸ்தோத்திரத்தை, |
| **नित्यं**<br>**நித்யம்** | - | எப்போதும், |
| **जपेत्**<br>**ஜபேத்** | - | ஜபிக்க வேண்டும். |

**தாத்பர்யம்:** - ஹே ராகவா, ராவணனைப் போல் அநேக விதமான பிரபலமான சத்ருக்களையும் அநாயாஸமாகவே ஜயித்துவிடலாம். அதற்கு அந்தரங்கமான ஓர் உபாயத்தைச் சொல்லுகிறேன். நீ கேள், அது ஒரு ஸ்தோத்ரமாகும். அதற்கு 'ஆதித்யஹ்ருதயம்' என்று பெயர். ஸூர்யன் என்ற தேவதையை த்ருப்தி செய்து வைத்து, அதன்மூலம் ஸூர்யமண்டலத்தின் நடுமத்தியில் பிரகாசிக்கிற ஸகுண ப்ரஹ்மமான பரமேச்வரனுடைய ப்ரஸாதத்தை ஸம்பாதித்துக் கொடுத்து, அதிலிரு

ந்து ஹ்ருதயகுஹாவாஸியான நிர்க்குண ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரத்துக்குக் காரண மாகிறபடியால் இந்த ஸ்தோத்ரத்துக்கு **ஆதித்ய ஹ்ருதயம்** என்ற பெயர் வழங்கி வருகிறது. பாராயணம் செய்கிறவர்களுக்குக் கூட மஹா புண்யத்தைக் கொடுக்கக் கூடியது. மஹா பாபிகளையும் பரிசுத்தம் செய்துவைக்கக் கூடியது. வேதத்தைப் போல் நித்யமானது. மிகவும் ரஹஸ்யமானது. ஆகிலும், ராமா, உன் விஷயத்தில் அதைப் பஹிரங்கமாகச் சொல்லுகிறேன். ஒவ்வொரு குடும்பத்திலும் இது சிந்தா மணி ரத்தினம் போல் இருந்து வரவேண்டியது மிகவும் அவசியமானது. ஒவ்வொரு மனிதனும் இதை நித்ய கர்மாவாகக் கருதி ஜபம் செய்ய வேண்டும்.

**सर्वमङ्गलमांगल्यं सर्वपापप्रणाशनम् ।**
**चिन्ताशोकप्रशमनम्, आयुर्वर्धनमुत्तमम् ॥ ३ ॥**

**ஸர்வமங்க³லமாங்க³ல்யம் ஸர்வபாபப்ரணாஶனம் ।**
**சிந்தாஶோகப்ரஶமனம், ஆயுர்வர்த⁴னமுத்தமம் ॥ 5 ॥**

| | | |
|---|---|---|
| **सर्वमंगलमांगल्यं** **ஸர்வமங்கலமாங்கல்யம்** | - | ஸகல விதமான மங்களத்துக்கெல்லாம் இருப்பிட மாகும். (அதாவது இந்த ஆதித்யஹ்ருதய ஸ்தோத்ரம் ஸகல விதமான ச்ரேயஸ்ஸுக்கும் காரணமாகும் என்பதை அறிக.) |
| **सर्वपापप्रणाशनं** **ஸர்வபாபப்ரணாஶனம்** | - | ஸமஸ்த விதமான ஸஞ்சித ஆகாமி முதலான கர்ம பாசங்களை நிவிருத்தி செய்துவிடும். |
| **चिन्ताशोकप्रशमनं** **சிந்தாஶோகப்ரஶமனம்** | - | சிந்தை என்ற மானஸமான வியாதியையும், சோகம் என்ற சாரீரமான வியாதியையும் நாசம் செய்துவிடும். |
| **आयुर्वर्धनं** **ஆயுர்வர்த⁴னம்** | - | ஏற்பட்ட ஆயுளுக்கு மேல் அதிகமாக ஆயுளின் விருத்திக்கும் இது காரணமாகும். |
| **उत्मं** **உத்மம்** | - | ஜபம் செய்ய வேண்டிய மந்த்ரங்களுக்குள் இது மிகவும் மேலானது. |

**தாத்பர்யம்:** - ராமா! இந்த ஆதித்யஹ்ருதயத்துக்கு ஸமானமான வைபவ முள்ள மந்த்ரம் வேறொன்றும் சாஸ்திரத்தில் இல்லை. இந்த மானிட ஜன்மாவை எடுத்தவன் எவ்விதமான ச்ரேயஸ்ஸுக்களை எதிர் பார்த்தாலும் அவற்றைக் கொடுக்கும். பந்தத்துக்கு ஹேதுவான கர்மாக்கள் எவ்வளவு இருந்தாலும் அவற்றை அறுத்துவிடும். ஆதியோ வியாதியோ எதுவாக இருந்தாலும் இந்த மந்த்ரத்தை ஜபிக்கிறவர்க ளிடம் அணுகவே அணுகாது.

இந்த மந்த்ரத்தைத் தினந்தோறும் பக்தியாகப் பாராயணம் செய்துகொண்டு வருகிறவர்கள் நோயற்ற வாழ்வுடன், மார்க்கண்டேயனைப் போல் சிரஞ்ஜீவியாக ஜீவித்து வருவார்கள். இதற்கு மேலாக மந்த்ரமே இனி இல்லை.

ஆனால், ராமா, உனக்கு இந்த மந்த்ரத்தால் ஆகவேண்டுமென்பது ஒன்றுமில்லை. ஆகிலும், நான் வித்யாமண்டல ரிஷியானதால் வேதத்திலிருந்து அதிஸாரமான இந்த மந்த்ரத்தை உத்தாரணம் செய்தேன். குடும்பிகளுக்கு இது மிகவும் அவசியமானது. முமுக்ஷுக்களுக்கும் அவ்விதமே. இதை லோகத்தில் பிரகடனம் செய்ய வேண்டும் என்ற ஆவல் வெகு நாளாக இருந்துவருகிறது. அதற்கு ஒரு மஹாபுருஷனை நிமித்தமாகவைத்துப் பிரகடனம் செய்ய வேண்டுமென்று நினைத்தாலும், அதற்குத் தகுந்த மஹாபுருஷன் ஒருவரும் அகப்படவில்லை. நீயோ, விஷ்ணுத்வத்தை இப்போது பிரகடனம் செய்யாமலே, ராவணனை வதம் செய்வதற்கு உபாயத்தைத் தேடிக்கொண்டிருக்கிறாய். இந்த ஸந்தர்ப்பத்தில் என்னிடம் நீ இந்த மஹாமந்த்ரத்தை உபதேசம் செய்து கொண்டால், நீ கூட இந்த மந்த்ர மஹிமையாலே ராவணனைக் கொன்று விட்டாய் என்ற காரணத்தினால் இந்த மந்த்ரத்துக்கே ப்ராசஸ்த்யம் (மஹிமை) ஏற்பட்டுவிடும். ஸாமான்ய ஜனங்களுக்கும் இந்த மந்த்ரத்தை க்ரஹித்துக் கொள்வதில் அதிக ஆதரவு ஏற்பட்டுவிடும். உன் மூலமாக இந்த மந்த்ரத்தை நான் மந்த்ரத்தை நான் லோகங்களிலெல்லாம் ப்ரஸித்தப் படுத்தலாம் என்று நினைக்கிறேன். உன்னுடைய இந்த ராமாவ தாரத்தில் எத்தனையோ ஸந்தர்ப்பங்களில் ப்ரஹ்மபாவத்தை மறைத்துக்கொண்டு, மனுஷ்யபாவத்தையே நடித்துக் காண்பித்திருக்கிறாய். அதுபோல் இந்த விஷயத்திலும் கொஞ்சம் மனுஷ்ய பாவத்தை நடித்துக்கொண்டு, என்னிடமிருந்து இந்த விஷயத்தை நீ க்ரஹித்துக் கொள்வதன் மூலம் எனக்கு ஒரு பெருமையைக் கொடுத்து, லோகத்தை ரக்ஷிப்பாய் என்று நினைக்கிறேன் என்று அகஸ்த்யர் சொன்னார்.

ஸ்ரீ ராமர் அதை அங்கீகரித்து, அந்த அகஸ்த்ய மஹர்ஷியினிடமிருந்து இந்த ஆதித்யஹ்ருதய ஸ்தோத்ரத்தை மிகுந்த ஆதரவுடன் பெற்றுக் கொண்டார்.

**संकल्पः । मम चिन्तितमनोरथ - अवाप्त्यर्थम् आदित्यहृदयस्तोत्रम - हामन्त्रजपं करिष्ये ॥**

**अस्य श्रीआदित्यहृदयस्तोत्र - महामन्त्रस्य अगस्त्यो भगवानृषिः । अनुष्टुप् छन्दः । आदित्यहृदयभूतः भगवान् ब्रह्मा देवता । निरस्त - अशेषविघ्नतया ब्रह्मविद्या - सिद्धौ सर्वत्र जयसिद्धौ च विनियोगः ॥**

**रश्मिमते बीजम् । सूर्याय शक्तिः । नमः कीलकम् । सर्वत्र जयसिद्ध्यर्थे जपे विनियोगः ॥**

**रश्मिमते अंगुष्ठाभ्यां नमः । समुद्यते तर्जनीभ्यां नमः । देवासुरनमस्कृतार्य मध्यमाभ्यां नमः । विवस्वते अनामिकाभ्यां नमः । भास्कराय कनिष्ठिकाभ्यां नमः ।**

**भुवनेश्वराय करतलकरपृष्ठाभ्यां नमः । रश्मिमते हृदयाय नमः । समुद्यते शिरसे स्वाहा । देवासुरनमस्कृताय शिखायै वषट् । विवस्वते कवचाय हुम् । भास्कराय नेत्रत्रयाय चौषट् | भुवनेश्वराय अस्त्राय फट् ॥**

**भूर्भुवस्वरोम् इति दिग्बन्धः ॥ ओं ध्यानम् ॥ प्रत्तस्य विष्णो रूपं च सत्यर्तस्य च ब्रह्मणः । अमृतस्य च मृत्योश्च सूर्यम् आत्मानम् ईमहि ॥**

**लं पृथ्व्यात्मने गन्धं समर्पयामि ।**
**हम् आकाशात्मने पुष्पाणि समर्पयामि ।**
**यं वाय्वात्मने धूपमाघ्रापयामि ।**
**रम् वह्न्यात्मने दीप दर्शयामि ।**
**वम् अमृतात्मने अमृतं महानैवेद्यं निवेदयामि ।**
**सं सर्वात्मने सर्वोपचारान् समर्पयामि ॥**

**ஸங்கல்பः । மம சிந்திதமனோரத2 - அவாப்த்யர்த2ம் ஆதி3த்யஹ்ருத3யஸ்தோத்ரமஹாமந்த்ரஜபம் கரிஷ்யே ॥**

**அஸ்ய ஶ்ரீஆதி3த்யஹ்ருத3யஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய அக3ஸ்த்யோ ப4க3வாந்ருஷிः । அனுஷ்டுப் ச2ந்த3ः । ஆதி3த்யஹ்ருத3யபூ4தः ப4க3வான் ப்3ரஹ்மா தே3வதா । நிரஸ்த அஶேஷவிக்4னதயா ப்3ரஹ்மவித்3யா ஸித்3தௌ4 ஸர்வத்ர ஜயஸித்3தௌ4 ச விநியோக3ः ॥**

**ரஶ்மிமதே பீ3ஜம் । ஸூர்யாய ஶக்திः । நமः கீலகம் । ஸர்வத்ர ஜயஸித்3த4யர்தே2 ஜபே விநியோக3ः ॥**

**ரஶ்மிமதே அங்கு3ஷ்டா2ப்4யாம் நமः । ஸமுத்3யதே தர்ஜனீப்4யாம் நமः । தே3வாஸுரநமஸ்க்ருதார்ய மத்4யமாப்4யாம் நமः । விவஸ்வதே அநாமிகாப்4யாம் நமः । பா4ஸ்கராய கநிஷ்டி2காப்4யாம் நமः । பு4வனேஶ்வராய கரதலகரப்ருஷ்டா2ப்4யாம் நமः । ரஶ்மிமதே ஹ்ருத3யாய நமः । ஸமுத்3யதே ஶிரஸே ஸ்வாஹா । தே3வாஸுரநமஸ்க்ருதாய ஶிகா2யை வஷட் । விவஸ்வதே கவசாய ஹூம் । பா4ஸ்கராய நேத்ரத்ரயாய சௌஷட் | பு4வனேஶ்வராய அஸ்த்ராய ப2ட் ॥**

**பூ4ர்பு4வஸ்வரோம் இதி தி3க்3ப3ந்த4ः ॥ ஓம் த்4யானம் ॥ ப்ரத்தஸ்ய விஷ்ணோ ரூபம் ச ஸத்யர்தஸ்ய ச ப்3ரஹ்மணः । அம்ருதஸ்ய ச ம்ருத்யோஶ்ச ஸூர்யம் ஆத்மானம் ஈமஹி ॥**

**லம் ப்ருத்²வ்யாத்மனே க³ந்த⁴ம் ஸமர்பயாமி ।**
**ஹம் ஆகாஶாத்மனே புஷ்பாணி ஸமர்பயாமி ।**
**யம் வாய்வாத்மனே தூ⁴பமாக்⁴ராபயாமி ।**
**ரம் வஹ்னயாத்மனே தீ³ப த³ர்ஶயாமி ।**
**வம் அம்ருதாத்மனே அம்ருதம் மஹாநைவேத்³யம் நிவேத³யாமி ।**
**ஸம் ஸர்வாத்மனே ஸர்வோபசாரான் ஸமர்பயாமி ॥**

# आदित्यहृदयस्तोत्रमहामन्त्रारम्भः

## ஆதித்யஹ்ருதய ஸ்தோத்ர மஹாமந்த்ராரம்ப:

**रश्मिमन्तं समुद्यन्तं देवासुरनमस्कृतम् ।**
**पूजयस्व विवस्वन्तं भास्करं भुवनेश्वरम् ॥ ४ ॥**

**ரஶ்மிமந்தம் ஸமுத்³யந்தம் தே³வாஸுரநமஸ்க்ருதம் ।**
**பூஜயஸ்வ விவஸ்வந்தம் பா⁴ஸ்கரம் பு⁴வனேஶ்வரம் ॥ 6 ॥**

ஆதித்யஹ்ருதயம் என்ற மஹா ஸ்தோத்திரத்தினுல் பிரதிபாதிக்கப் பெறுகிற தேவதையினுடைய ஸ்வரூபம் சொல்லப்பெறுகிறது.

### रश्मिमन्तं (ரஶ்மிமந்தம்)

1. காலையில் உதிக்கும் ஸூர்யன் தங்க வர்ணமுள்ளவனுதலால், மிகவும் அழகான கிரணங்களினுல் அலங்கரிக்கப்பெற்றவனுகவும்,

2. **रश्मि रश्मीनां मध्ये तपन्तं**
**(ரஶ்மி ரஶ்மீனும் மத்⁴யே தபந்தம்)** என்று

**सुवर्ण घर्म अनुवाकं**
**(ஸுவர்ண க⁴ர்ம அனுவாகம்)**

என்ற வாக்கியத்தில் சொன்னபடி, **रश्मि** (**ரஶ்மி**) என்ற சப்தத்தினுல் பகவானுக்குப் பரம அந்தரங்க பக்தர்களையே அர்த்தமாகக் கருத வேண்டும். அதனுல் பகவத் தத்துவத்தை அறிந்த ஞானிகளாகிய பரம அந்தரங்க பக்தர்களுடைய மத்தி யில் பாஸிக்கிறவனுகவும்,

3. சக்ஷூரிந்த்ரியம் (கண்) முதலான ஐந்து ஞானேந்த்ரியங்கள் மூலமாக ஞானரச்மிகளோடு கூடினவனுகவும்,

## समुद्यन्तं (ஸமுத்³யந்தம்)

1. பாதி உதயமில்லாமல் பர்பூர்ணமாக உதயமாகி விளங்குகிறவனுகவும்,

2. **यः पूर्व्याय वेधसे नवीयसे (யஃ பூர்வ்யாய வேத⁴ஸே நவீயஸே)** என்ற ச்ருதி ப்ரகாரம் புதிது புதிதாகப் பக்தர்களுக்கு ஸ்வரூபத்தைப் பிரகாசப் படுத்துகிற வனுகவும்,

3. பிராணிகளைக் கிரியைகளில் பிரவ்ருத்திக்கச் செய்கிறவனுகவும்,

## देवासुरनमस्कृतम् (தே³வாஸுரநமஸ்க்ருதம்)

1. வேதத்தைப் பிரமாணமாக நம்பின வைதிகர்களாலும், வேதபாஹ்யர்களான அவைதிகர்களாலும் நமஸ்கரிக்கப்பெற்றவனுகவும்,

2. **देवानां दानवानां च सामान्यम् अधिदैवतम्**
**(தே³வானும் தா³னவானும் ச ஸாமான்யம் அதி⁴தை³வதம்)**

என்ற சாஸ்த்ரத்தை அநுஸரித்து இந்த்ரன் முதலான தேவர்களுக்கும், விரோசனன் முதலான அஸுரர்களுக்கும், உபாஸிக்கத் தகுந்த தேவதையாகவும்,

3. ஸாத்த்விகமான இந்த்ரிய வ்ருத்திகளாகிய தேவர்களுக்கும், ராஜஸ தாம ஸமான இந்த்ரிய வ்ருத்திகளாகிய அஸுரர்களுக்கும் ஸாக்ஷி சைதன்யமாகப் பாஸிக்கிறதாகவும்,

## विवस्वन्तं (விவஸ்வந்தம்)

1. **विवस्ते आच्छादयति तेजोन्तरम्**
**(விவஸ்தே ஆச்சா²த³யதி தேஜோந்தரம்)**

என்ற ஸமாஸத்தால் தன்னுடைய பிரகாசத்தால் சந்திரன், அக்கினி, நக்ஷத்திரங்கள் இவற்றின் பிரகாசத்தை மக்னப்படுத்துகிறதாகவும்,

2. **अथ यदतः परो दिवो ज्योतिर्दीप्यते विश्वतः**
**पृष्ठेषु सर्वतः पृष्ठेषु अनुत्तमेषु उत्तमेषु लोकेषु**
**(அத² யத³தஃ பரோ தி³வோ ஜ்யோதிர்தீ³ப்யதே விஶ்வதஃ ப்ருஷ்டே²ஷு ஸர்வதஃ ப்ருஷ்டே²ஷு அனுத்தமேஷு உத்தமேஷு லோகேஷு)**

என்ற ச்ருதியால் ஸர்வ ஸம்ஸார தர்ம அதீதமாயும், நிரதிசயமாயும், அகண்டமாக பாஸித்து வருகிறதாயும்,

3. **विशेषेण वसुमान् विवस्वान्**
**(விஶேஷேண வஸுமான் விவஸ்வான்)**

என்ற ஸமாஸத்தை அநுஸரித்து ஸகல வ்யவஹாரத்துக்கும் அதிஷ்டானமாக விளங்குகிறதாகவும்,

**भास्करं (பா⁴ஸ்கரம்)**

1. எப்போதும் காந்தியை உண்டுபண்ணுகிறதாயும்,

2. **न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं**
**(ந தத்ர ஸூர்யோ பா⁴தி ந சந்த்³ரதாரகம்)**

என்ற ச்ருதியால் லோகத்தை பாஸிக்கச் செய்கிற சந்த்ர ஸூர்யாதிகளுக்கும் பிரபையைக் கொடுக்கிறதாயும்,

3. **ज्ञानं, ज्ञेयं, ज्ञाता**
**(ஜ்ஞானம், ஜ்ஞேயம், ஜ்ஞாதா)**

என்ற த்ரிபுடிகளுக்கு ஸாக்ஷியாயும்,

**भुवनेश्वरं (பு⁴வனேஶ்வரம்)**

1. மழையினாலும் வெயிலினாலும் ஜகத்துக்கு நியந்தாவாகவும்,

2. ஸகல அண்டபிண்டங்களுக்கு அந்தர்யாமி யாகவும்,

3. மூலாதாரம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டாநம், அநாகதம், விசுத்தி, ஆஜ்ஞை, ப்ரஹ்மரந்த்ரம் என்ற யோக ஆதார பூமிகளுக்கு அதிஷ்டான தேவதை யாயும் உள்ள

(1) ஸூர்யனை,
(2) ஸூர்ய மண்டல அந்தர்வர்த்தியான பரமபுருஷனை,
(3) ஹ்ருதய குஹாவாஸியான பரப்ரஹ்மத்தை,

## पूजयस्व (பூஜயஸ்வ)

ஆதித்யஹ்ருதயம் என்ற மஹாமந்த்ரத்தால் ஸந்தோஷிக்கச் செய்.

**தாத்பர்யம்:** - ஆதித்யஹ்ருதய ஸ்தோத்திரம் என்ற மஹாமந்த்ரத்தில் மேற்கண்ட ச்லோகம் முதலாவதாகும். இதில் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று விதமான உபாஸனங்கள் சொல்லப்பெறுகின்றன. 1. ஸூர்யபரமாக அர்த்தத்தைக் கவனிக்கும்போது ஸ்தூலமான உபாஸனமாகும். 2. ஸூர்யமண்டல மத்தியில் அந்தர் வர்த்தியான பரமபுருஷபரமாகக் கவனிக்கும்போது ஸூக்ஷ்மமான உபாஸனமாகும். 3. ஹ்ருதய குஹையில் விளங்கி வரும் நிர்குண ப்ரஹ்மபரமாக விளங்கி வரும் போது காரண உபாஸனமாகும்.

ஸ்தூல உபாஸனத்தினுல் மாநுஷானந்தமும், ஸூக்ஷ்ம உபாஸனத்தினுல் தேவானந்தமும், காரண உபாஸனத்தினுல் ப்ரஹ்மானந்தமும் கிரமமாக ஏற்படுகிற படியால், ஸுகத்தை விரும்புகிற குடும்பிகளுக்கு இந்த ஆதித்யஹ்ருதய ஸ்தோத்தி ரம் மிகவும் முக்கியமானது. இதில் ஒவ்வொரு பதத்தையும் நான்காம் வேற்றுமை யாகச் சொல்லி நமஸ்காரம் செய்தாலும் சரி, அல்லது பிரதிமையில் அர்ச்சனை செய்தாலும் சரி, அவ்விதம் செய்கிற ஸாதகனுக்கு ஸகல விதமான ஸௌபாக்ய ங்களும் உண்டாகும். இந்த சலோகத்தில் ஆறு விதமான நாமாக்கள் அடங்கியிருக் கின்றன. அவற்றில் ஒவ்வொன்றையும் நான்காம் வேற்றுமையின் உருவமாக அடியிற் கண்டபடி அறிக.

1. **रश्मिमते नमः (ரஶ்மிமதே நம:)**
2. **समुद्यते नमः (ஸமுத்³யதே நம:)**
3. **देवासुरनमस्कृताय नमः (தே³வாஸுரநமஸ்க்ருதாய நம:)**
4. **विवस्वते नमः (விவஸ்வதே நம:)**
5. **भास्कराय नमः (பா⁴ஸ்கராய நம:)**
6. **भुवनेश्वराय नमः (பு⁴வனேஶ்வராய நம:)**

**सर्वदेवात्मको ह्येषः, तेजस्वी रश्मिभावनः ।**
**एप देवासुरगणान् लोकान् पाति गभस्तिभिः ॥**

**ஸர்வதே³வாத்மகோ ஹ்யேஷ:, தேஜஸ்வீ ரஶ்மிபா⁴வன: ।**
**ஏப தே³வாஸுரக³ணுன் லோகான் பாதி க³ப⁴ஸ்திபி⁴: ॥ 7 ॥**

**एषः (ஏஷ:)** இந்த (இந்த பதம் பிரத்யக்ஷ நிர்த்தேசத்தைக் காண்பிக்கிறது.)

1. ஸூர்யபரமாக அர்த்தம் சொல்லும்போது எல்லா ஜனங்களுக்கும் பிரத்யக்ஷமாகும்.

2. ஸூர்யமண்டல அந்தர்வர்த்தியான புருஷ பரமாக அர்த்தம் சொல்லும் பொழுது ஜிதேந்தரியர்களான மஹர்ஷிகளைக் குறித்துப் பிரத்யக்ஷமாகும்.

3. நிர்குண ப்ரஹ்மமாக அர்த்தம் சொல்லும் போது ஞான நிஷ்டர்களான முக்த புருஷர்களுக்குப் பிரத்யக்ஷமாகும்.

## सर्वदेवात्मकः (ஸர்வதே³வாத்மகः)

1. **सूर्य आत्मा जगतः तस्थुषश्च**
**(ஸூர்ய ஆத்மா ஜக³தः தஸ்து²ஷஶ்ச)**

என்ற ச்ருதியை அநுஸரித்து ஸூர்யன் ஸ்தாவர ஜங்கமரூபமான ஸகலமான ஜகத்துக்கும் ஜீவதாதுவாகிறுன் என்ற அர்த்தம் வெளியாகிறது.

2. ஸூர்யமண்டல அந்தர்வர்த்தியான பரம புருஷன் ஸகல தேவதைகளையும் சரீரமாக உடையவன்.

3. ஹ்ருதய குஹாவாஸியான பரப்ரஹ்மம் ஸமஸ்தமான தேவர்களோ அல்லது அஸுரர்களோ எல்லா ஜகத்துக்கும் அபின்ன நிமித்த உபாதான காரணமாக ஆகிறது.

## तेजस्वी (தேஜஸ்வீ)

1. ஸூர்யன் ராத்திரியிலுள்ள இருட்டுக்களை நீக்கும் ஸ்வபாவமுள்ளவன்.

2. ஸூர்யமண்டல அந்தர்வர்த்தியான பரம புருஷன் ஸமஸ்த பக்தர்களுடைய எல்லா விதமான சத்ருக்களையும் நாசம் செய்வதில் ஸாமர்த்யமுள்ளவன்.

3. ஜடமான ஸங்காதங்களைக்கூடச் சேதனம் போல் சேஷ்டிக்கச் செய்யும் சக்தியுள்ளவன்.

## रश्मिभावनः (ரஶ்மிபா⁴வனः)

1. ஸூர்யன் தன் கிரணங்களினுல் ஸகல லோகங்களையும் ரக்ஷிக்கிறவன்.

2. ஸூர்யமண்டல அந்தர்வர்த்தியான பரம புருஷன் தன் பக்தகோடிகளுடைய யோகக்ஷேமத்தை நிர்வஹிக்கிறவன்.

3. ஹ்ருதயகுஹாவாஸியான பரமாத்மா ஞானரச்மிகளால் எல்லா வஸ்துக்களையும், ஸத்துப் போலும், சித்துப்போலும், ப்ரியம் போலும் செய்கிறது.

**एषः** (**ஏஷ**:) = 1. இந்த ஸூர்யன், 2. இந்த ஸூர்யமண்டல அந்தர்வர்த்தியான உத்தம புருஷன். 3. இந்த ஹ்ருதயகுஹாவாஸியான பரமாத்மா.

**देवासुरगणान् लोकान् (தே³வாஸூரக³ணான் லோகான்) =**
1. ஆஸ்திக நாஸ்திக ஜனங்களை, **2.** தேவாஸூரக் கூட்டங்களாகிய ஜனங்களை, **3.** ஸத்வ்ருத்தி, அஸத்வ்ருத்தி ரூபமான இந்த்ரிய வ்ருத்திகளாகிற தத்துவங்களை,

**गभस्तिभिः (க³ப⁴ஸ்திபி⁴:)** = **1.** கிரணங்களால், **2.** அந்தரங்க பக்தகோடிகளால், **3.** ஞானரச்மிகளால், पाति (பாதி) = ரக்ஷிக்கிறன்.

மேற்கண்ட சலோகத்தில் நான்கு நாமாக்கள் இருக்கின்றன. அவற்றுக்கு நான்காம் வேற்றுமையுடன் கூடிய உருவங்களை அடியிற்கண்டபடி அறிக.

| | |
|---|---|
| 1. **सर्वदेवात्मकाय नमः** | **ஸர்வதே³வாத்மகாய நம:** |
| 2. **तेजस्विने नमः** | **தேஜஸ்வினே நம:** |
| 3. **रश्मिभावनाय नमः** | **ரஶ்மிபா⁴வனாய நம:** |
| 4. **देवासुरगणलोकपालाय नमः** | **தே³வாஸூரக³ணலோகபாலாய நம:** |

**एष ब्रह्मा च विष्णुच शिवः स्कन्दः प्रजापतिः ।**
**महेन्द्रो धनदः कालो यमस्सोमो ह्यपां पतिः ॥**

**ஏஷ ப்³ரஹ்மா ச விஷ்ணுச ஶிவ: ஸ்கந்த³: ப்ரஜாபதி: ।**
**மஹேந்த்³ரோ த⁴னத³: காலோ யமஸ்ஸோமோ ஹ்யபாம் பதி: ॥ 8 ॥**

**एषः** (**ஏஷ**:) = **1.** இந்த ஸூர்யன், **2.** இந்த ஸூர்ய மண்டல அந்தர்வர்த்தியான பரமேச்வரன், **3.** ஹ்ருதய குஹாவாஸியான பரப்ரஹ்மம்.

**ब्रह्मा (ப்³ரஹ்மா)** = **1.** உதயகாலத்திலும், அஸ்தமன காலத்திலும் நித்திரையில்லாமல் விழித்துக்கொண்டிருக்கிறவனுக்கு ஐச்வர்யத்தையும் கல்வியையும் ஸ்ருஷ்டித்துக் கொடுக்கிற விஷயத்தில் ஸூர்யனே ப்ரஹ்மாவாக ஆகிறன்.

**2.** இந்த ஸூர்யமண்டல அந்தர்வர்த்தியான பரமேச்வரன் ப்ரஹ்மாவினுடைய தகப்பனுரான படியால்,

**आत्मा वै पुत्रनामासि**

**(ஆத்மா வை புத்ரநாமாஸி)**

என்ற ச்ருதியினுல் ப்ரஹ்மா என்ற பதத்துக்கும் பொருளாக ஆகும்.

3. **ब्रह्मयति इति ब्रह्म**
**(ப்³ரஹ்மயதி இதி ப்³ரஹ்ம)**

என்ற ஸமாஸத்தினுல் ஹ்ருதய குஹாவாஸியான பரப்ரஹ்மம் தன்ஊ ஸ்மரித்த வனுக்கு பரிச்சின்ன பாவத்தைப் போக்கடித்து, அபரிச்சின்னமான ஆத்ம பாவத்தைக் கொடுக் கிறபடியால் **ப்ரஹ்மா** என்ற பதத்தால் சொல்லப்பெறுகிறது.

**विष्णुः (விஷ்ணு:)** = 1. **विषु व्याप्तौ (விஷு வ்யாப்தௌ)** என்ற தாதுவினுல் இந்த ஸூர்யன் ஸகல ஜகத்தையும் வ்யாபித்திருக்கிறவன். 2. இந்த ஸூர்ய மண்டல அந்தர்வர்த்தியான பரமபுருஷன் தான் உபேந்த்ரன் என்று சொல்லப்பெறும் வாமன மூர்த்தியாக அவதாரம் செய்தவர். 3. ஹ்ருதய குஹாவாஸியான சராசரமாயுள்ள ஸகலமான ஜகத்துக்கும் உபாதான காரணமாக ஆவதனுல், ஸகல பதார்த்தங்கஊயும் அனுவர்த்தித்துக்கொண்டிருக்கிற அதிஷ்டான வஸ்துவாகும்.

**शिवः (ஶிவ:)** = 1. இந்த ஸூர்யன் ஸகல ஜகத்துக்கும் மங்களத்தை உண்டு பண்ணுகிறவன். 2. ஸூர்ய மண்டல அந்தர்வர்த்தியான பரமபுருஷனே மஹா கைலாஸத்தில் ஸகல தேவகோடிகளாலும் பூஜிக்கப் பெற்ற பரமசிவனுகிருர். 3. **मंगलानां च मंगलं (மங்க³லானும் ச மங்க³லம்)** என்ற சாஸ்த்ரப்ரகாரம் **ब्रह्मैवाहं (ப்³ரஹ்மைவாஹம்)** என்று அநுஸந்தானம் செய்வதனுல், ஸ்மரணம் என்ற பக்தி செய்து கொண்டு வரும் பக்தசிகாமணிகளுக்கு மோக்ஷம் என்ற பரம புருஷார்த்தத் தைக் கொடுக்கிறவர்.

**स्कन्दः (ஸ்கந்த³:)** = 1. **स्कन्दिर्गति शोषणयोः (ஸ்கந்தி³ர்க³தி ஶோஷணயோ:)** என்ற தாதுவை அநுஸரித்து, சத்ருக்கஊச் சோஷிக்கச் செய்கிறவன். 2. ஸூர்ய மண்டல மத்தியிலிருக்கும் பரமபுருஷன் ஷண்முகனே. 3. முன் சொன்ன தாதுவை யே அநுஸரித்து அஞ்ஞானமாகிய அந்தகாரத்தை (இருட்டை)ச் சோஷிக்கச் செய்கிற பரப்ரஹ்மம்.

**प्रजापतिः (ப்ரஜாபதி:)** = 1. ஸகல பிரஜைகளுக்கும் மழையைக் கொடுத்து ரக்ஷிக்கிறவன், 2. ஸூர்ய மண்டலத்திலுள்ள பரமபுருஷன் பிரஜைகஊ எல்லாம் ஸர்வசக்தியான மாயைமூலமாக ஸ்ருஷ்டிக்கிறவன். 3. ஹ்ருதய நிவாஸியான ப்ரஹ்மம் இந்த்ரியங்களுக்கெல்லாம் அதிஷ்டான தேவதைகளாகிற ஸூர்யன் முதலான தேவதைகளுக்குங்கூட யஜமானனுகக்கூடிய பெருமையோடு கூடினவர்.

**महेन्द्रः (மஹேந்த்³ர:)** = 1. இந்த்ரனுக்கு மேலானவன் இந்த ஸூர்யன். 2. ஸூர்யனுடைய மத்தியிலுள்ள பரமபுருஷன் நிரவதிகமான ஐச்வர்ய ஸம்பன்னன். **इदि परमैश्वर्ये (இதி³ பரமைஸ்வர்யே)** என்ற தாதுவே அதில் பிரமாணமாக ஆகும். 3.

**इन्द्रो मायाभिः पुरुरूप ईयते (இந்த்³ரோ மாயாபி⁴: புருரூப ஈயதே)** என்ற ச்ருதியால் பரமார்த்தத்தில் ஒன்றுனாலும் மாயா ஸம்பந்தத்தினால் அநேக உருவங்களாகத் தோன்றுகிறவன்.

**धनदः (த⁴னத³:)** = 1. **अन्नादः वसुदानः (அந்நாத³: வஸுதா³ன:)** என்ற ச்ருதியினுல், வர்ஷம் (மழை) மூலமாக ஜனங்களுக்கு அன்னம், தனம் இவற்றைக் கொடுக்கிறவன். 2. ஸூர்ய மண்டலத்திலுள்ள பரமேச்வரன் செய்யக்கூடிய தனத்தினுல் ஸகல விதமான கர்மாக்களுக்கும் பலனைக் கொடுக்கிறவன். 3. ஹ்ருதயகுஹாவாஸியான ப்ரஹ்மம் ஸகல பிராணிகளேயும் அநுக்ரஹம் செய்வதன்பொருட்டு **धनं (த⁴னம்)** என்ற சைதன்யத்தை எல்லாப் பிராணிகளுடைய **அந்த**: (உள்) ப்ரதேசத்தில் ஸ்தாபனம் செய்கிறவன். அதாவது ஞானதாதா என்று அர்த்தம்.

**कालः (கால:)** = 1. காலத்தைக் காட்டுகிறதனுல் கால சப்தத்தினுல் சொல்லப் பெறுகிறுன். 2. ஸர்வ ஜகத்தையும் ஸம்ஹாரம் செய்கிற காலாக்கினி ருத்ரன் இவரே. 3. **कालयति इति कालः (காலயதி இதி கால:)** என்ற ஸமாஸத்தினுல் ஸகல பிராணிகளுடைய மனத்திலுள்ளதைப் பிரத்யக்ஷமாக அறிகிறவன்.

**यमः (யம:)** = 1. ஸகல பிராணிகளுடைய பிராணனை அபஹரிக்கிற ம்ருத்யுவுக்குத் தகப்பனுர் இந்த ஸூர்யனுகிறபடியால் **யம** சப்தத்தினுல் சொல்லப் பெறுகிறுன். 2. அந்தர்யாமியாக இருந்து கொண்டு எல்லாப் பிராணிகளேயும் சிக்ஷிக்கிறவன். 3. பேததர்சிகளே (ஜீவன் வேறு, ஈச்வரன் வேறு என்று சொல்லுகிறவர்களே) ஸம்ஹாரம் செய்கிறவன்.

**सोमः (ஸோம:)** = 1. **षु प्रसव-ऐश्वर्ययोः (ஷு ப்ரஸவ-ஐஶ்வர்யயோ:)** என்ற தாதுவை அநுஸரித்து ஸகல ஜகத்துக்கும் காரணன். 2. பார்வதீ காந்தன். 3. ப்ரஹ்ம வித்யா அதிதேவதை.

**अपां पतिः (அபாம் பதி:)** = 1. ஜலத்துக்கு நாதன், 2. ஜலசாயியான (கடலில் பள்ளி கொண்டிருக்கும்) நாராயணன், 3. **अप् (அப்)** என்றுல் **சித்தம்** என்ற தத்துவம். அதற்கு ஸாக்ஷி, புத்திஸாக்ஷி என்று அர்த்தம்.

இந்த சலோகத்தில் அடங்கிய நாமாக்கள் பதினுென்று. அவற்றுக்கு நான்காம் வேற்றுமையுடன் கூடிய உருவங்களே அடியிற்கண்டபடி அறிக -

| | |
|---|---|
| 1. **ब्रह्मणे नमः** | **ப்³ரஹ்மணே நம:** |
| 2. **विष्णवे नमः** | **விஷ்ணவே நம:** |
| 3. **शिवाय नमः** | **ஶிவாய நம:** |

4. स्कन्दाय नमः ஸ்கந்தா³ய நமः
5. प्रजापतये नमः ப்ரஜாபதயே நமः
6. महेन्द्राय नमः மஹேந்த்³ராய நமः
7. धनदाय नमः த⁴னதா³ய நமः
8. कालाय नमः காலாய நமः
9. यमाय नमः யமாய நமः
10. सोमाय नमः ஸோமாய நமः
11. अपांपतये नमः அபாம்பதயே நமः

**पितरो वसवस्साध्या ह्यश्विनौ मरुतो मनुः ।**
**वायुर्वह्निः प्रजाः प्राणः ऋतुः कर्ता प्रभाकरः ।।**

**பிதரோ வஸவஸ்ஸாத்⁴யா த்³யஶ்விநௌ மருதோ மனுः ।**
**வாயுர்வஹ்னிः ப்ரஜாः ப்ராணः ருதுः கர்தா ப்ரபா⁴கரः ॥ 9 ॥**

**पितरः** (பிதரः) =

1. **अग्निष्वात्ताः** (**அக்³நிஷ்வாத்தாः**) என்ற பித்ரு தேவதைகளுக் குத் திருப்தியைக் கொடுக்கும் ஸத்கர்மாக்களுக்கு முக்கியமான காலத்தைக் காண்பிப்பதனுல் ஸூர்யன் பித்ரு தேவதைகளுடைய ப்ரஸாதத்தைப் பிராணிகளு க்கு ஸம்பாதித்துக் கொடுக்கும் விஷயத்தில் காரணபூதனுக ஆகிறன் என்றதனுல் பித்ருதேவதைகளாகவே ஸூர்ய பகவான் ஸ்துதிக்கப்பெறுகிறார்.

2. **तासां ब्रह्म महद्योनिः अहं बीजप्रदः पिता**

**(தாஸாம் ப்³ரஹ்ம மஹத்⁴யோனிः அஹம் பீ³ஜப்ரத³ः பிதா)**
என்ற சாஸ்த்ரத்தை அநுஸரித்து, ஜீவகோடிகளாகிய ஸந்ததிகளை உண்டுபண்ணுவ தில் மாயையுடன் ஸம்பந்தப்பட்டு மாயையில் ஈச்வரனே பீஜப்ரதனுகிறபடியால் **பித்ரு** சப்தத்தினுல் பரமேச்வரன் சொல்லப் பெறுகிறுர். அதனுல் ஸூர்ய மண்டல மத்தியிலுள்ள பரமேச்வரனையும் இந்த இடத்தில் **பிதர**ः என்ற சப்தத்தினுல் சொல்லி யிருக்கிறது.

3. **पितेत्येव च मन्त्रदं**

**(பிதேத்யேவ ச மந்த்ரத³ம்)**
என்றதை அநுஸரித்தும், **वेदान्तकृत्** (**வேதா³ந்தக்ருத்**) என்ற ஸ்ம்ருதியை அநுஸரித் தும், ஹ்ருதய குஹாவாஸியான பரப்ரஹ்மம் ஞானதாதாவானதனுல் **பித்ரு** சப்த வாச்ய மாகவும் ஆகிறது.

**वसवः** (வஸவः)

1. **सदा वसन्तीति वसवः (ஸதா³ வஸந்தீதி வஸவ:)** என்ற ஸமாஸத்தை அநுஸரித்து, எப்போதும் ஸ்திரமாக உள்ள ஸூர்யனை **வஸூ** என்ற சப்தத்தால் பெரியோர்கள் சொல்கிறுர்கள்.

2. **वासयतीति वसुः (வாஸயதீதி வஸு:)** என்ற வ்யுத்பத்தியினுல் ஜீவனைச் சரீரத்தில் வஸிக்கும்படி செய்கிற அந்தர்யாமியானதனுல் ஸூர்யமண்டல அந்தர்யா மியான பரமபுருஷனும் அந்த **வஸு** என்ற பதத்தினுல் சொல்லப் பெறுகிறுன்.

3. **वसु अहमर्थः (வஸு அஹமர்த²:)** என்ற சாஸ்த்ரத்தை அநுஸரித்து, **நான்** என்ற பதத்துக்குப் பொருளாகும் அந்தராத்மாவும் வஸுசப்தார்த்தமாக ஆகிறது.

**साध्याः (ஸாத்⁴யா:)**

1. உபாஸன மார்க்கத்தினுல் அபர ப்ரஹ்மலோகத்தை அடைகிற உபாஸ கர்களுக்கு ஸூர்யபகவான் த்வாரமாகிறபடியால் உபாஸகர்களின் விஷயத்தில் **ஸாத்யா**: என்ற பதத்தினுல் ஸூர்யனைச் சொல்லுகிறுர்கள்.

2. **साधयतीति साध्यः (ஸாத⁴யதீதி ஸாத்⁴ய:)** என்ற ஸமாஸத்தினுல், ஸகல பக்தகோடிகளுக்கும் ஸமஸ்த விதமான புருஷார்த்தங்களையும் ஸாதித்துக் கொடுப்பதனுல் அந்த ஸூர்ய மண்டல மத்தியிலுள்ள பரமேச்வரனை **ஸாத்ய** சப்தத் தினுல் சொல்லுகிறுர்கள்.

3. வேத ப்ரமாணத்தினுல் ஸாதிக்கத் தகுந்த பரப்ரஹ்மம் **शास्त्रयोनित्व (ஶாஸ்த்ரயோனித்வ)** அதிகரணத்தை அநுஸரித்து ஸாத்யமாகிறது. ஆகையால் **ஸாத்ய** சப்தம் நிர்குண ப்ரஹ்மத்தையும் குறிப்பிடுகிறது.

**अश्विनौ (அஶ்வினௌ)** =

1. பெண்குதிரை ரூபமாயுள்ள **ஸம்ஜ்ஞா** தேவியினிடத்தில் ஆண்குதிரை ரூபமான ஸூர்ய பகவானுக்குப் பிறந்த பிள்ளைகள் இருவரையும் அச்விநீ தேவதை கள் என்று சொல்லுகிறபடியாலும், தேவ வைத்தியர்களான இந்த இருவர் மூலமே ஸகல தேவர்களையும் ரக்ஷித்து வந்ததனுலும், ஸூர்யபகவான் **அஶ்வினௌ** என்ற பதத்தினுல் சொல்லப்பெறுகிறுர்.

2. **अश्नुते: वन्प्रत्ययान्त: अश्वशब्द:**

**(அஶ்னுதே: வன்ப்ரத்யயாந்த: அஶ்வஶப்³த³:)**

என்ற ப்ரக்ரியையை அநுஸரித்து, ஸர்வவ்யாபகன் என்று ஸூர்யமண்டல மத்தியி லுள்ள பரமபுருஷன் ஸ்துதிக்கப்பெறுகிறுன்.

3. அதே ப்ரக்ரியையை அநுஸரித்து, **வந்** ப்ரத்யயம் அம்ருதம் என்ற அர்த்தத்தைக் கூறுமாகையால், அகண்டமான அம்ருதக்கடல் நிர்குண ப்ரஹ்மமே என்பதும் வெளியாகிறது.

**मरुत: (மருத:)** =

1. **म्रु प्राणत्यागे (ம்ரு ப்ராணத்யாகே³)** என்ற தாதுவை அநுஸரித்து, உபாஸகர்களுடைய அனர்த்தங்களுக்கு நாசகன் என்று ஸூர்ய பரமாக அர்த்தமாகிறது.

2. **न म्रियन्ते मरुतः येन सः मरुत् (ந ம்ரியந்தே மருதஃ யேன ஸஃ மருத்)** என்பதனுல் தேவர்களுக்கு மரண மில்லாமலிருக்கும் வரத்தைக் கொடுத்த பகவான் ஸ்ரீமந் நாராயணன் என்று ஸூர்யமண்டல மத்யாந்தர்வர்த்தியான பரமபுருஷ பரமாக அர்த்தத்தை அறிக.

3. முன் சொன்ன தாதுவை அநுஸரித்து, எந்த ப்ரஹ்மத்தைத் தெரிந்து கொள்வதிலோ, உபதேசிப்பதிலோ பிராணனைக் கூடப் பெரிதாக நினைக்காமல் தியாகம் செய்திருக்கிறுர்களோ, அந்த ப்ரஹ்மமே மருத் என்ற சப்தத்தினுல் சொல்லப்பெறும். **ததீசி** மஹர்ஷியினுடைய சிரஸ்ஸை (தலையை)த் தேவேந்த்ரன் அபஹரித்த கதையே இதற்கு உதாஹரணமாகும். இந்த ரீதியினுல் **மருத்** என்ற சப்தமே ஹ்ருதயவாஸியான நிர்குண பரப்ரஹ்மமாகும்.

**मनुः (மனுஃ)** =

1. **मनुत इति मनुः (மனுத இதி மனுஃ)** என்பதனுல், ஸர்வஸாக்ஷி ஸூர்யனே.

2. **मननात् मनुः (மனனாத் மனுஃ)** என்றதனுல், எப்போதும் ஸர்வ ஜகத்திலுள்ள எல்லாப் பிராணிகளுடைய ஸம்ரக்ஷணையை உத்தேசித்து ஆலோசனை செய்துகொண்டிருக்கும் நாராயணனே ஸூர்யமண்டல அந்தர்வர்த்தியான பரமபுருஷன்.

3. **मन आलोचने (மன ஆலோசனே)** என்ற தாதுவினுல், சித்ரூபனுன பரமாத்மா என்று வெளியாகிறது. அதாவது ஹ்ருதயவாஸியான நிர்குண ப்ரஹ்மம்.

**वायुः (வாயுஃ)** =

1. **वा गतिगन्धनयोः (வா க³திக³ந்த⁴னயோஃ)** என்ற தாதுவினுல், வெகு வேகமாகப் போகும் ஸ்வபாவமுள்ளவன் இந்த ஸூர்ய பகவான்.
2. ஸத்வாஸனையை உண்டுபண்ணும் ஸ்வபாவமுள்ளவன்.
3. மோக்ஷ ஸாதனமான ஞானத்தைக் கொடுக்கும் சீலமுள்ளவன்.

**वह्निः (வஹ்னிஃ)** =

1. **वहति हव्यं इति वह्निः (வஹதி ஹவ்யம் இதி வஹ்னிஃ)** என்ற ஸமாஸத்தை அநுஸரித்தும், **अग्नौ प्रास्ताहुतिः सम्यक् आदित्यमुपतिष्ठते (அக்³னௌ ப்ராஸ்தாஹுதிஃ ஸம்யக் ஆதி³த்யமுபதிஷ்ட²தே)** என்ற சாஸ்த்ரத்தினுலும், அக்கினியில் ஹோமம் செய்யப்பெறுகிற ஹவிஸ்ஸை ஸூர்யன் க்ரஹித்துக் கொண்டு போகிறபடியால், ஸூர்யனுக்கு வஹ்நி : என்ற பெயர் உண்டு.

2. **वह प्रापणे** (**வஹ ப்ராபணே**) என்ற தாதுவினுல், ஸகல பக்தகோடி களையும் தன்னுடைய லோகத்துக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பிப்பதனுல் ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவுக்கும் **வஹ்நி**: என்ற பெயர் உண்டு.

3. **वहेः निः वह्निः** (**வஹேः நிः வஹ்னிः**) என்ற தாதுவை அநுஸரித்து, தன்னுடைய ஸ்வரூபத்திலேயே தான் ப்ரதிஷ்டிதனுக இருந்துகொண்டு, தன்னிடத்தி லேயே ஸர்வ பதார்த்தங்களையும் வஹித்து வருவதனுல், நிர்குண ப்ரஹ்மத்துக்கும் **வஹ்நி**: என்ற பெயர் உண்டு.

**प्रजाः** (**ப்ரஜாः**) =

1. எல்லா விதத்திலும் மேன்மையாகப் பிறந்தவர்கள்; அதாவது தெய்வ ஸம்பத்தோடு கூடியவர்கள். அதில் ஸூர்யன் முதன்மையான வரானதனுல் **ப்ரஜா**: என்ற சப்தத்தினுல் சொல்லப் பெறுகிறுர்.

2. **प्रकृष्टात् जायन्ते सर्वे पुरुषाः** (**ப்ரக்ருஷ்டாத் ஜாயந்தே ஸர்வே புருஷாः**) என்ற ஸமாஸத்தினுல், விராட்புருஷனும் **ப்ரஜா**: என்ற சப்தத்தினுல் சொல்லப் பெறுகிறுன்.

3. **प्रकृष्टं जन्म पुरुषाणां यद्धिगमे**

**(ப்ரக்ருஷ்டம் ஜன்ம புருஷாணும் யத்³தி⁴க³மே)**

என்ற ஸமாஸத்தினுல், எந்த ப்ரஹ்மத்தை அறிந்தால் மானிடப் பிறப்பு மேலான தாக ஆகுமோ என்ற காரணத்தைக் கொண்டு, **ப்ரஜா**: என்ற சப்தத்தினுல் நிர்குண ப்ரஹ்மம் சொல்லப்பெறுகிறது.

**प्राणः** (**ப்ராணः**) =

1. **प्राणयति इति प्राणः** (**ப்ராணயதி இதி ப்ராணः**) என்பதனுல், ஸூர்யன் தன் கிரணங்களினுல் ஸுஷும்ஞ நாடியில் ஸம்பந்தப்பட்டு ஸகல ப்ராணிகளுக் கும் உயிரைக் கொடுக்கிறவனுகிறபடியால் ஸூர்யனே **ப்ராண** சப்தத்தினுல் சொல்லப் பெறுகிறுன்.

2. **न प्राणेन नापानेन मों जीवति कश्चन ।**

**इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥**

**ந ப்ராணேன நாபானேன மோம் ஜீவதி கஶ்சன ।**

**இதரேண து ஜீவந்தி யஸ்மின்னேதாவுபாஶ்ரிதௌ ॥**

என்ற ச்ருதியினுல், ப்ராணயாத்ரையை நடத்தி வைப்பதனுல் மஹா விஷ்ணுவுக்கே **ப்ராணன்** என்ற பெயரும் உண்டு.

3. **प्राणस्य प्राणम्** (**ப்ராணஸ்ய ப்ராணம்**) என்ற ச்ருதியால், ப்ராணனுக்கும் அதிஷ்டான சைதன்யமான பரப்ரஹ்மம் **ப்ராண** சப்தத்தால் சொல்லப் பெறுகிறது.

**ऋतुः** (**ருதுः**) =

1. **इयर्ति इति ऋतुः** (**இயர்தி இதி ருதுः**)

என்ற ஸமாஸத்தால், கர்மாவில் எல்லா ஜனங்கஜளயும் ப்ரேரஜண செய்கிறவன் இந்த ஸூர்யன்.

2. **ऋ गतौ (ரு க³தௌ)** என்ற தாதுவினுல், அபர வித்யாப்ராப்யன்; அதாவது உபாஸனா மார்க்கத்தினால் அடையக்கூடிய ஸகுணப்ரஹ்மம்.

3. அதே தாதுவினுல், ஞானமார்க்கத்தினுல் அடையக்கூடிய நிர்குண ப்ரஹ்மம் என்று அர்த்தமாகிறது.

**कर्ता (கர்த்தா)** =

1. கர்ம ஸாக்ஷியான ஸூர்யன் என்று அர்த்தம்.

2. **तेन विना तृणाग्रमपि न चलति (தேன விஞ த்ருணக்³ரமபி ந சலதி)** என்ற ச்ருதியினுல், ஸர்வ பூதங்களுடைய அந்தராசயத்தில் தான் வஸித்துக் கொண்டு ஸகல கர்மாக்களுக்கும் கர்த்தாவாக இருக்கும் ஸகுண ப்ரஹ்மம் என்று அதன் பொருளை அறிக.

3. ஸகல ஜகத்துக்கும் அபிந்ந நிமித்தோபாதான காரணமான பரப்ரஹ்மம் என்று அறிய வேண்டும்.

**प्रभाकरः (ப்ரபா⁴கர:)** =

1. பிரகாசத்தைச் செய்கிற ஸூர்யன்.

2. மோக்ஷ ஸாதனமாகிற ஞானத்தை பக்தகோடிகளுக்கு உண்டு பண்ணு கிறவன்.

**तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।**
**ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥**

**தேஷாம் ஸததயுக்தானாம் ப⁴ஜதாம் ப்ரீதிபூர்வகம் ।**
**த³தா³மி பு³த்³தி⁴யோக³ம் தம் யேன மாமுபயாந்தி தே ॥**

என்ற பகவத் கீதா வாக்யமே இந்த அர்த்தத்தில் ப்ரமாணமாகும்.

3. **ப்ரபை** என்றுல் முக்திஸ்ரீ. அதை ஞானிகளுக்கு அளிக்கிறவன்; அதாவது நிர்குண ப்ரஹ்மம் என்று தெரிந்துகொள்க.

இந்த சலோகத்தில் அடங்கியிருக்கிற நாமாக்கள் பதின்மூன்று. அவற்றை நான்காம் வேற்றுமையுடன் அடியிற் கண்டபடி தெரிந்துகொள்ள வேண்டும்.

1. **पितृमूर्तये नमः** — **பித்ருமூர்தயே நம:**
2. **वसुमूर्तये नमः** — **வஸுமூர்தயே நம:**
3. **साध्यमूर्तये नमः** — **ஸாத்⁴யமூர்தயே நம:**
4. **अश्विमूर्तये नमः** — **அஶ்விமூர்தயே நம:**
5. **मरुन्मूर्तये नमः** — **மருன்மூர்தயே நம:**

6. मनवे नमः — மனவே நம꞉
7. वायवे नमः — வாயவே நம꞉
8. वह्नये नमः — வஹ்வயே நம꞉
9. प्रजामूर्तये नमः — ப்ரஜாமூர்தயே நம꞉
10. प्राणाय नमः — ப்ராணய நம꞉
11. ऋतवे नमः — ருதவே நம꞉
12. कर्त्रे नमः — கர்த்ரே நம꞉
13. प्रभाकराय नमः — ப்ரபா⁴கராய நம꞉

**आदित्यः सविता सूर्यः खगः पूषा गभस्तिमान् ।**
**सुवर्णसदृशो भानुः हिरण्यरेता दिवाकरः ॥**

**ஆதி³த்ய꞉ ஸவிதா ஸூர்ய꞉ க²க³꞉ பூஷா க³ப⁴ஸ்திமான் ।**
**ஸுவர்ணஸத்³ருஶோ பா⁴னு꞉ ஹிரண்யரேதா தி³வாகர꞉ ॥ 10 ॥**

**आदित्यः** (**ஆதி³த்ய꞉**) =

1. காச்யப ப்ரஜாபதியினுடைய தர்மபத்தினியான அதிதி தேவிக்குப் புத்திரனாக அவதரித்து லோகத்தைப் பிரகாசிக் ஸூர்ய பகவான்.

2. திதி என்றால் பரிச்சின்னம் என்று பொருளாகும். அதிதி என்றால் அபரிச் சின்னம் என்று அறிக. அதனால் அதிதிக்கு - அகண்டிதமான பூமிக்குப் பதி (நாதனாக) ஆகிறான் என்ற தாத்பர்யத்தைக் கொண்டு, பூமாதேவிக்கு அதிபதியான மஹா விஷ்ணு என்று அர்த்தம்.

**अदितेः अखण्डितायाः भूमेः अयं पतिः इत्यादित्यः**

**அதி³தே꞉ அக²ண்டி³தாயா꞉ பூ⁴மே꞉ அயம் பதி꞉ இத்யாதி³த்ய꞉**

என்ற ஸமாஸத்தைக்கொண்டு, மேற்சொன்ன அர்த்தத்தை அறிந்துகொள்ள வேண் டும்.

3. **यस्मात् सर्वं आदत्ते तस्मात् आदित्यः**

**யஸ்மாத் ஸர்வம் ஆத³த்தே தஸ்மாத் ஆதி³த்ய꞉**

என்ற உபநிஷத்தாலும், அதே ரூபமான ஸமாஸத்தாலும் ஸமஸ்தமான விசேஷங் களிலிருந்தும் ஜீவனை விமுக்தனாகச் செய்யும் பரப்ரஹ்மமே பிரக்ருதத்தில் ஆதித்தியன் என்ற சப்தத்தின் அர்த்தமாகிறது.

**सविता** (**ஸவிதா**) =

1. **सुते जगत् इति सविता**

(**ஸுதே ஜக³த் இதி ஸவிதா**)

என்ற ஸமாஸத்தால் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிற விஷயத்தில் முக்கியமான ஸாமக்ரியான ஸூர்ய பகவான்.

2. **सुवति प्रेरयति जनान् कर्मणि (ஸுவதி ப்ரேரயதி ஜனான் கர்மணி)** என்ற ஸமாஸத்தாலும், **षु प्रेरणे (ஷு ப்ரேரணே)** என்ற தாதுவினாலும், ஸர்வலோக நியந்தாவான லக்ஷ்மீபதி என்பதை அறிக.

3. **सुवति ज्ञानं जनानाम् (ஸுவதி ஜ்ஞானம் ஜனானாம்)** என்ற ஸமாஸத்தால் ஞானதாதாவான பரமாத்மா என்று அறிய வேண்டும்.

**सूर्यः (ஸூர்ய:)** =

1. ஜகத்தை பாஸிக்கச் செய்கிற ஸூர்ய பகவான்.
2. அந்தர்யாமியாக இருந்து கொண்டு நியமனம் செய்கிறவன்.
3. **सुष्टु प्रेरयति** (ஸுஷ்டு ப்ரேரயதி) என்ற ஸமாஸத்தால் ஸுஷ்டுவாக ஏவுகிறவன். அதாவது தான் நிருபாதிகனாகவே இருந்துகொண்டு ஏவுகிறதனால், வைஷம்ய, நைர்க்ருண்யம் (விரோதம், இரக்கமின்மை) தன்னிடத்தில் வராமல் செய்துகொண்டும், ஸந்நிதி மாத்திரத்தினாலேயே பிரேரகனைப் போல் பாஸிக்கிற நிர்விசேஷமான பரமாத்மா.

**खगः (க²க³:)** =

1. லோகத்துக்கு உபகாரம் செய்வதற்காக ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிற ஆதித்திய பகவான்.
2. **खे (கே²)** ஹ்ருதயாகாசத்தில் பாஸித்துவருகிற பரமாத்மா.
3. **खे (கே²)** பரமாகாசத்தில் பாஸித்து வருகிற நிர்குண ப்ரஹ்மம்.

**पूषा (பூஷா)** =

1. **वर्षेण पुष्णाति जगत् (வர்ஷேண புஷ்ணாதி ஜக³த்)** என்ற ஸமாஸத்தால் மழைமூலமாக ஜகத்தை ரக்ஷிக்கிறவன்.
2. **पुष पुष्टौ (புஷ புஷ்டௌ)** என்ற தாதுவினால், உபாஸிக்கிறவர்களுக்கு ஸர்வ விதத்திலும் புஷ்டியைக் கொடுக்கிறவன்.
3. **पुष्णाति इति पूषा (புஷ்ணாதி இதி பூஷா)** என்ற ஸமாஸத்தால், ஜீவனை ப்ரஹ்மமாக பாஸிக்கச் செய்கிறவன்.

**गभस्तिमान् (க³ப⁴ஸ்திமான்)** =

1. கிரணங்களோடு கூடிய ஸூர்ய பகவான்.
2. **गां दिशं व्याप्य आभास्ति प्रकाशयति इति गभस्ति**

**(காம்³ தி³ஶம் வ்யாப்ய ஆபா⁴ஸ்தி ப்ரகாஶயதி இதி க³ப⁴ஸ்தி)** என்ற ஸமாஸத்தால் **गभस्ति (க³ப⁴ஸ்தி)** என்ற பதத்தால் ஸர்வலோக வ்யாபி நீயான மஹாலக்ஷ்மீ என்று அறிக. **नित्ययोगे मतुप् (நித்யயோகே³ மதுப்)** என்ற சாஸ்த்ரத்

